பரஞ்சோதிமுனிவர்

அருளிச்செய்த

# திருவிளையாடற் புராணம்

## திருவாலவாய்க் காண்டம்

(1 முதல் 8 படலங்கள்)



நாவலர் பண்டித

திரு ந மு வேங்கடசாமி நாட்டாரவர்கள்

எழுதிய

உரையுடன்



கழக வெளியீடு

கழக வெளியீடு, ௧௦௪௧

உ

திருச்சிற்றம்பலம்

பரஞ்சோதிமுனிவர்

அருளிச்செய்த

# திருவிளையாடற் புராணம்

## திருவாலவாயக் காண்டம்

(1 முதல் 8 படலங்கள்)



நாவலர் பண்டித

திரு ந மு வேங்கடசாமி நாட்டாரவர்கள்

எழுதிய

உரையுடன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி–6. சென்னை - 1.

1964

நடுக்காவேரி முத்துச்சாமி வேங்கடசாமி நாட்டார் (1884-1944)



Ed 1 May 1960
Reprint June 1964

Q23:38xJ50,1x
K4

# TIRUVILAIYADAR PURANAM
## Tiruvalavaaik Kaandam

Appar Achakam, Madras-1.

# பதிப்புரை

நம் தமிழகத்தில் தொன்றுதொட்டு இன்றுவரை நின்று நிலவியுலவுவது செந்தமிழ் மொழி ஒன்றே. மற்றை மொழிகளும் வழங்கினவெனினும் அவைகள் என்றும் ஒரு தன்மைத்தாய் இருந்தனவல்ல—இருப்பனவும் அல்ல. இதுபோல மற்றைச் சமயங்களும் நம் நாட்டில் வழங்கினவெனினும் சைவ சமயம் போல் நின்று நிலைபெற்றனவல்ல. எனவே மக்கட்குத் தமிழும் சைவமும் இரு விழிகளாக இலங்குகின்றன. இவ்விரண்டும் உணரா மடவோர், வாழ்க்கை வழிச்செல்ல வகையறியாது அந்தகர்போல வெந்துயர் அடைவர் என்பது வெளிப்படை. இவற்றை வளர்க்க வேண்டிய கடமையும் நாட்டு மக்களைச் சார்ந்ததே. சைவமும் தமிழும் தழைக்கக் கருதி இயற்றிய நூலே பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளையாடற் புராணம் ஆம்.

இந் நூற்குச் சிறந்தவுரை முன்னர் இல்லாததால், இலக்கணப் புலமையும் இலக்கியப் புலமையும் சமயநூற் புலமையும் வாய்ந்த தனிச் சிறப்புடைய திருவாளர், பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களை உரை எழுதும்படி வேண்டி அவ்வுரையோடு சேர்த்து 1927 இல் அச்சியற்றி மதுரைக் காண்டம், கூடற் காண்டம், திருவாலவாய்க் காண்டம் என மூன்று பகுதிகளாக வெளியிட்டனம். கல்லூரி, உயர்நிலைப்பள்ளி, நூல் நிலையம் ஆகிய இடங்களிலும் புலவர் மனைகளிலும் அந்நூல் புகுந்து போற்றப் பட்டு வருவதை யாவரும் அறிவார்.

இப்போது அந்நூலில் ஒரு பகுதியாகிய திருவாலவாய்க் காண்டத்தில் முன்னின்ற எட்டுப் படலங்களையும் சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் தேர்வுக்குப் பாடமாக வைத்திருப்பது கண்டோம். மாணவர் யாவரும் இதனை வாங்கிக் கற்பதற்குரிய வகையில் எட்டுப் படலத்தையும் உரையுடன் அச்சியற்றி வெளியிடுவது நலமெனக் கருதினம். முன்னுரை வரைந்து அப் படலங்களிற் கூறும் கதைச் சுருக்கமும் சிறப்பும் விளக்கி

வரைந்து தனிப் புத்தகமாக இந்நாள் வெளியிடுகின்றோம். இது வித்துவான் வகுப்பு மாணவர்கட்கும் அவ் வகுப்புக்குப் பாடங் கற்பிக்கும் ஆசிரியர்க்கும் பெரிதும் பயன்படும் என்பது எம் குறிக்கோள்.

பரஞ்சோதி முனிவரியற்றிய திருவிளையாடற் புராணம் தமிழுக்குத் தனிச்சிறப்புத் தருவது என்பதும், நாட்டாரவர்கள் உரையும் அத்தகைய நலம் பயப்பது என்பதும் நாம் கூற வேண்டுவதின்று. தமிழறிஞர் பலரும் அறிந்ததே. மாணவரும் ஆசிரியரும் புலவர்களும் வாங்கிக் கற்று நற்பயன் பெற்று நாட்டு நலம் கருதி வாழ்க.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# நூலாசிரியர் வரலாறு

திருவிளையாடற் புராணம் என்னும் இந் நூலைப்பற்றிய ஆசிரியர் பெயர் பரஞ்சோதி முனிவர் என்பது. இவர், தமிழ்நாட்டில் தலைசிறந்ததாய வான்பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி பாயுஞ் சோழவள நாட்டிலுள்ள திருமறைக்காடு என்னும் திரு நகரில் வழிவழிச் சைவ வேளாள மரபில் மீனாட்சிசுந்தர தேசிகர் என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றினர். இளம் பருவத்தில் தென்மொழி வடமொழி கற்றுச் சிறந்த புலமையுடையவராய் விளங்கினர். சிவாகமங்களையும் அவற்றின் சாரமாகிய சித்தாந்த சாத்திரங்களையும் பயின்று தேர்ந்தார். தேவாரம் திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறைகளையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்து சிவநெறிச் செல்வராய்ச் சிறப்பெய்தியிருந்தனர்.

இவர் தாம் பிறந்த திருநகராகிய மறைக்காட்டுத் தலவரலாறு வடமொழியில் இருந்தது கண்டு முதலில் அதனை மொழிபெயர்த்துத் "திருமறைக்காட்டுத் தலபுராணம்" (வேதாரணிய புராணம்) என வெளிப்படுத்தினர். பின்னர்ச் சிவப்பதிகள் பல காண விருப்புற்றுச் சென்றார். திருவாரூர், திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, திருத்தில்லை முதலிய பதிகட்குச் சென்று சிவபெருமானை வழிபட்டு வருங்கால் திருவாலவாய் என்னும் மதுரைப் பதி வந்தடைந்தார். அது மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற மூன்றனும் சிறப்புற்று விளங்குவது என்பதையும், சிவபெருமான் அன்பர்கள் உய்யும் பொருட்டு நிகழ்த்திய அறுபத்து நான்கு திருவிளையாடலுடையது என்பதையும், இறையனார் முதலிய சங்கப் புலவர் கூடித் தமிழாராய்ந்த பெருமையுடையது என்பதையும் ஆய்ந்து அங்கயற்கண்ணியையும் அண்ணலையும் அல்லும் பகலும் வழிபட்டு ஆங்கு நெடுநாளுறைந்தார்.

அங்ஙனம் தங்கிய காலத்தில் அந் நகர மாந்தர் பலரும் பரஞ்சோதி முனிவரைக் கண்டு பணிந்து மதுரைத் திருவிளையாடல் அறுபத்து நான்கினையும் தமிழிற் பாடியருள வேண்டும் என வேண்டினர். வேம்பத்தூராராற் செய்யப்பட்டு வழங்கி வரும் திருவிளையாடல் வடமொழிக் கதையோடு பொருத்தமின்றி

திருப்பதையும், சொற்சுவை பொருட்சுவை நிரம்பாது பத்திச் சுவை குன்றிப் பாக்கள் இருப்பதையும் எடுத்து மொழிந்தனர். வடமொழியும் தென்மொழியும் கற்றுவல்ல ஆசிரியராகிய பரஞ்சோதியார் மதுரைப்பதி வரலாறு கூறும் நூல்கள் பலவும் ஆய்ந்து அதனுண்மை கண்டார். காந்தபுராணத்தின் ஒரு பகுதியாகிய ஆலாசிய மான்மியத்தை அடிப்படையாகக் கொண்டு பாடத் துணிந்தனர்.

ஒருநாட் கனவில் அங்கயற்கண்ணியம்மையார் தோன்றி "இறைவன் திருவிளையாடலை இன்னே பாடுக" என ஆணை தந்து மறைந்தார். சத்தியின் ஆணையாற் பாடத் தொடங்கியதற்கு அறிகுறியாகச் "சத்தியாய்ச் சிவமாகி" எனத் தொடங்கிப் பாடி முடித்தார். அந் நூலினைச் சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கோயின்முன் அறுகாற் பீடத்தமர்ந்து வடமொழி தென்மொழிவல்ல புலவர் யாவரும் போற்ற அரங்கேற்றியருளினர்.

அன்றியும் திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி என்னும் இரு நூல்களும் இவர் இயற்றியருளினர். இவர் பாடிய நூல் கற்பார்க்கு எளிமையும் இனிமையும் உடையதாய் உவமை யுருவக முதலிய அணிகள் நிறைந்து இன்பச் சுவையும் பத்திச் சுவையும் இயைந்து களிப்பூட்டவல்லதாய் ஒளிர்கின்றது. இவர் காலம் பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதி யென்பர்.

# முன்னுரை

**ஆக்கியோன்**

(1) திருவிளையாடற் புராணம் என்னும் இந்நூல், சோழ வள நாட்டுள்ள திருமறைக்காட்டில் வழிவழிச் சைவ வேளாளர் மரபில் தோன்றிய பரஞ்சோதி முனிவர் என்னும் பாவலர் பெருமானாற் பாடப்பட்டது. இவர் வரலாற்றை முன்னர்க் காண்க.

## நூல் தோன்றிய வழி

**மதுரைச் சிறப்பு**

(2) "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு" எனப் புகழப்பட்ட தமிழகத்திற் "செந்தமிழ் நாடு" எனச் சிறப்பாகக் கூறப்படுவது பாண்டிநாடாம் என்பது பலரும் அறிந்ததே. அந் நாட்டு மன்னர் பாண்டியர்க்கு வழிவழி அரசிருக்கையாய தலைநகர் மதுரை. இது திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள், குன்றெறிந்த முருகவேள் வந்தமர்ந்து தமிழ் ஆராய்ந்த தனிச் சிறப்புடையது; மலையத்துவசன் மகளாக அங்கயற்கண்ணம்மை பிறந்து வளர்ந்து அரசுபுரிந்த பெருமையுடையது; சிவபெருமானும் முருகவேளும் முறையே சுந்தரமாறனாகவும் உக்கிரப் பெருவழுதியாகவும் பெயர் புனைந்து செங்கோல் செலுத்திய சீர்வாய்ந்தது; தலைச் சங்கமும் கடைச்சங்கமும் தழைத்து வளர்ந்து தமிழாராய்தற்கு நிலைக்களமாயது; எட்டுத்தொகையுள் ஒன்றாகிய பரிபாடலில் (வையை, மதுரை) முப்பது பாடல்களாற் பாராட்டப் பெற்றது; பாண்டி நாட்டில் தேவாரப் பாடல் பெற்ற திருப்பதிகளில் "கூடல் புனவாயில்" என முன்வைத்தெண்ணப்பட்ட முதன்மையுடையது; திருவாலவாய், கூடல் எனச் சிறப்புப்பெயர் பெற்றது. இப் பதியில் இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல் அறுபத்து நான்கு என அறிஞர் கூறுவர்.

**திருவிளையாடல் வந்துள்ள நூல்கள்**

(3) திருவிளையாடல் வரலாற்றிற் பல தமிழ்நாட்டு இலக்கியங்களில் வந்துள்ளன. தமிழன்னை தாட்சிலம்பாகப் போற்றப் படுஞ் சிலப்பதிகாரத்தில் "அடியிற்றன்னள வரசர்க் குணர்த்தி, வடிவே லெறிந்த வான்பகை பொறாது" என்ற அடிகள் "கடல் சுவற வேல்விட்டது" என்ற கதையையும், "செங்கணாயிரத்தோன் திறல்விளங் காரம், பொங்கொளி மார்பிற் பூண்டோன்" "முடி

வளையுடைத்தோன் முதல்வன் சென்னியென் றிடியுடைப் பெருமழை பெய்தா தேகப், பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப, மழைபிணித் தாண்ட மன்னவன்" என்ற அடிகள் இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலத்தில் உள்ள சில கதைகளையும், "வெள்ளியம்பலத்து நள்ளிருட் கிடந்தோன்" என்ற அடி வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய கதையையும் சுட்டுகின்றன. கல்லாடர் இயற்றிய கல்லாடம் என்ற நூலில் "கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப் பொற்குவை தருமிக் கற்புட னுதவி" எனவும், "வையைக் கூலஞ்சுமக்கக் கொற்றாளாகி" எனவும், "கரிக்குருவிக்குக் கண்ணருள் கொடுத்த" எனவும், "மாமியாடப் புணரியழைத்த கூடற்கிறைவன்" எனவும், "குறுநரியினத்தினை, யேழிடந்தோன்றியினனுற் கியைந்து, வாலுளைப் புரவி யாக்கிய பெருமான்" எனவும் வந்துள்ள அடிகள் முறையே தருமிக்குப்பொற்கிழியளித்தது, மண்சுமந்தது, கரிக்குருவிக்குபதேசித்தது, எழுகடலழைத்தது, நரிபரி யாக்கியது என்ற திருவிளையாடல்களைக் காட்டுகின்றன. இன்னும் அந்நூலில், இந்திரன் பழிதீர்த்தது, திருமணம் புரிந்தது, வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியது, அன்னக்குழியும் வையையும் அழைத்தது, உக்கிரகுமார பாண்டியர் திருவவதாரம், கடல் சுவற வேல்விட்டது, கல்லானைக்குக் கரும்பருத்தியது, அங்கம் வெட்டியது, வளையல் விற்றது, சோழனை மடுவில் விட்டியது, மாமனாக வந்து வழக்குரைத்தது, திருமுகம் கொடுத்தது, இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது, வலைவீசியது, ஆய பல திருவிளையாடல்கள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. தேவாரத் திருமுறையில் நான்மாடக்கூடலானது, சங்கப்பலகை தந்தது, தருமிக்குப் பொற்கிழியளித்தது, வலை வீசியது, பாண்டியன் சுரந்தீர்த்தது, சமணரைக் கழுவேற்றியது முதலியன கூறப்படுகின்றன. மணிவாசகப் பெருமான் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகம் திருக்கோவையார் என்ற நூல்களில் வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியது, மெய்க்காட்டிட்டது, அட்டமாசித்தியுபதேசித்தது, தண்ணீர்ப் பந்தல் வைத்தது, பன்றிக்குட்டிக்குப் பால் கொடுத்தது, கரிக்குருவிக்குபதேசித்தது, வலைவீசியது, வாதவூரடிகளுக்கு உபதேசித்தது, நரியைப் பரியாக்கியது, மண் சுமந்தது முதலிய திருவிளையாடல்கள் வந்துள்ளன. ஆதலால் இவ் வரலாறுகள் பண்டைக்கால முதல் நிகழ்ந்தவையாகத் தமிழ்நாட்டில் வழங்கியவையே என்பது தேற்றம்.

### திருவிளையாடலை மட்டும் கூறும் சிறப்பு நூல்கள்

(4) இனி இத் திருவிளையாடல்களையே விளக்க எழுந்த நூல்கள் சில. செல்விநகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி என்பவர் இயற்றிய திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்,

(வேம்பத்தூரார் திருவிளையாடல் எனப் பெயர்பெற்றது), தொண்டைநாட்டு இளம்பூர் விமநாத பண்டிதர் இயற்றிய கடம்பவன புராணம், தொண்டைநாட்டு வாயற்பதி அனதாரியப்பன் இயற்றிய சுந்தரபாண்டியம், பரஞ்சோதி முனிவர் பாடிய இத் திருவிளையாடற் புராணம். இந் நான்கு நூல்களும் மதுரைத் திருவிளையாடல்களையே வகுத்துரைக்கும் நூல்களாம். அவற்றுள் நம்பி, பரஞ்சோதியார் இயற்றிய இரு நூல்களுமே அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் விரித்துரைப்பன. விரிந்த நூல் பரஞ்சோதியார் பாடிய இந்நூலேயாம்.

முதனூல்

(5) இந் நூலாசிரியர் பாயிரத்தில், நந்தியடிகள் வியாத முனிவற்குணர்த்த, அவர் சூதமுனிவற்குக் கூறியது பதினெண் புராணம் என்றும், அப் பதினெட்டிற் காந்தம் என்பது ஒன்றென்றும், அக் காந்தபுராணத்தில் ஒரு பிரிவு ஈச சங்கிதை என்றும், அதில் ஆலவாய்ப் புகழ் கூறப்பட்டுள்ளது என்றும், அவ் வடமொழி நூலைத் தென்மொழியிற் செய்க எனக் கூடற் பதி வாழ்வோர் கூற அதனைக் கடைப்பிடித்து நான் இந்நூலை இயற்றினேன் என்றும் விளக்கியிருப்பதால் இதற்கு முதனூல் வடமொழி நூலாகிய ஆலாசிய மான்மியம் என்று தோன்றுகின்றது.

ஆலாசிய மான்மியம் முதனூலாய காரணம்

(6) இவ் வரலாறு முழுவதும் தமிழ்நாட்டினர் அறிந்து பண்டைக்கால முதல் இலக்கியங்களிலும் வரலாற்று நூல்களிலும் விளக்கியிருப்பவும் அவற்றையெல்லாம் கற்றுணர்ந்த முற்றுணர்வுடைய பரஞ்சோதி முனிவர் வடமொழியிலுள்ள "ஆலாசிய மான்மியம்" என்ற நூலை முதனூலாகக் கொண்டு திருவிளையாடல் பாடினரென்றல் பொருந்துமா என்பது ஆராயத் தக்கது. ஆசிரியர் காலம், ஆரியத்தினின்று தமிழ்மொழி தோன்றிற்று என்று கூறுவதைப் பெருமையாகக் கொண்ட காலம்; ஆரியத்தினின்று மொழிபெயர்த்த நூல் இஃது என்றால் அந்நூலை மதித்துப் போற்றுங் காலம்; வடமொழியே தெய்வ மொழி; தமிழ்மொழி அதன் வழிமொழி இழிமொழியென எண்ணிய காலம்; வேதம், புராணம், ஆகமம், இதிகாசம் எல்லாம் ஆரிய மொழியிலுள்ளவையே; அவற்றை மொழிபெயர்த்துத் தான் தமிழ்நாட்டார் கற்கவேண்டும்; தனியாகத் தமிழ்மொழியில் ஒன்றும் இன்று என்று பிழைபடக் கருதிய காலம்; ஆரியர்கள் சூழ்ச்சியாகத் தமிழ்நாட்டினுள் நுழைந்து, நம்நாட்டுக் கதைகளை யாய்ந்து ஆரியத்தில் வரைந்து வைத்துப் பின் எமது

மொழியில் இக் கதைகள் முன்னரே எழுதி இலக்கிய வடிவில் இருக்கின்றன என எடுத்துக்காட்டி ஏமாற்றி வாழ்ந்த காலம். அக் காலத்தில் வாழ்ந்த அம் முனிவர் அதனை முதனூலாகக் கொள்ளல் மிகவும் பொருத்தமுடையதேயாகும். இக் காலத்தும் வடமொழி வழிவந்தது செந்தமிழ் எனக் கூறுவோரும் சிலர் உளரன்றோ? ஆரிய மொழிபெயர்ப்பாயினும் இந் நூலிற் கூறப்படுங் கதைகள் தமிழ்நாட்டில் நிகழ்ந்தவையே. உலக வழக்கினும் செய்யுள் வழக்கினும் பயின்றவை. இக் கதைகளை வடநூற் புலவர் வரைந்ததாற் சில மாறுபாடு காணப்படினும் இந் நூலாசிரியர் தமிழ்நூற் கருத்துக்கு மாறுபாடின்றித் திருத்தி யமைத்துள்ளார். சொற்களையும் சொற்றொடர்களையும் தமிழ்மொழிக்கேற்ப இனிமையா யமைத்து எழிலுறப் புனைந்திருப்பது பாராட்டற்பாலது. மொழிபெயர்ப்பு என முன்னுவதற்குத் தக்க காரணம் ஒன்றும் இல்லை. தமிழ்நாட்டுக் கதையைத் தமிழ் மொழியில் ஆக்கியது இந்நூல் எனக் கோடலே சிறந்தது. ஆயினும் அக் காலநிலை நோக்கி ஆசிரியர் அதனை முதனூல் எனக் கொண்டனர் எனக் கொள்க.

வழங்கும் நாடு

(7) பாண்டிய நாட்டிற் சிறந்த தென்மதுரைப் பதியில் நிகழ்ந்தவை இவ்வறுபத்து நான்கு திருவிளையாடல்கள்; எனினும் சேர நாடு, சோழ நாடு, தொண்டை நாடு, கொங்கு நாடு எனப் பகுக்கப்பட்ட நாடுகளிலும் இவ்வரலாற்றினை அறியாத புலவர் எவரும் இரார். "மதிமலி புரிசை மாடக் கூடல்" என்ற திருமுகப் பாசுரம் சேரமான் பெருமாணாயனார்க்கு இறைவன் விடுத்தனர் எனிற் சேரநாடு அறிந்த வரலாறுதான் அது. சோழனை மடுவில் வீட்டிய வரலாறு, சோழநாடறிந்ததுதான்! பாண்டியன் சுரந்தீர்த்தவர் திருஞானசம்பந்தர்; தேவாரத் திருமுறையில் திருநீற்றுப்பதிகமும் ஒன்றன்றோ? மற்றும் பல பதிகங்கள் மதுரையில் திருவாய்மலர்ந்தருளினர் சம்பந்தர்; திருவாலவாய்த் திருப்பதிகம் பாடிய திருஞானசம்பந்தர் சென்று பாடிய சிவத்தலங்கள் எண்ணிறந்தவையன்றோ? அவர் சென்ற தலங்களெல்லாம் மதுரைத் திருவிளையாடலை யறிந்திருக்குமன்றோ? முதற்சங்கமும் கடைச்சங்கமும் கூடலின் முளைத்துத் தழைத்தனவெனத் தமிழிலக்கியம் சாற்றுகின்றன. கடைச்சங்கப் புலவருள் ஒருவன் நக்கீரன்; "கொங்குதேர் வாழ்க்கை" என்ற கவிக்குக் குற்றங் கூறினன். அவ் வரலாறு அச் சங்கப்புலவர் பலரும் அறிந்ததுதானே? புலவர் பலரும் பல நாட்டிலும் பல ஊர்களிலும் இருந்து வந்து கூடித் தமிழ் ஆராயும் அறிஞர்தாம். எனவே அப் புலவர்கள் சென்றவிடமெல்லாம் கதைகளும் சென்றிருக்கும்.

ஆதலால் இத் திருவிளையாடல் சைவமும் தமிழும் தழைத்திருக்கும் தமிழ்நாடெங்கணும் என்னென்றும் வழங்கியது என்பது கூறுமலே விளங்கும்.

## பெயர்

(8) இளமைப் பருவமுள்ள சிறார் சிறுமியர் கூடியாடுவதை விளையாடல் என்று கூறுவர். மணலைக் கூட்டி வளைத்துச், சிற்றில் இழைத்து, உழைத்துப், பலபொருள் தேடி அதன்கண் வைத்துக் காத்திருந்து, பின்னர்க் காலால் அழித்துவிடுதல் அவரியற்கை. சிந்தித்தலின்றிச் செய்யுஞ் சிறுதொழில் இது. இதுபோலவே இறைவனும் முத்தொழிலும் சிந்தித்தலின்றி எளிதிற் புரிந்து இன்புறுகின்றான். "உலகம் யாவையும் தாமுள வாக்கலும், நிலை பெறுத்தலும், நீக்கலும் நீங்கலா, அலகிலா விளையாட்டுடையாரவர், தலைவ ரன்னவர்க் கேசர ணுங்களே" என்றார் கம்பநாட்டாழ்வாரும். பத்தியிற் சிறந்த அன்பர் பொருட்டு மதுரையிற் பலகாலங்களிற் புரிந்த விளையாடல்கள் எல்லாவற்றையும் விளக்கிய நூல் இது. ஆதலால் இந் நூலுக்குத் திருவிளையாடற் புராணம் எனப் பெயரிட்டார் பரஞ்சோதி முனிவர். திரு - சிறப்பு. புராணம் - பழைமை. சிறந்த விளையாடல் ஆகிய பழைமை வரலாறு என்பது திரண்டபொருள் எனக் காண்க.

## அமைத்திருக்கும் முறை

(9) இவற்றை மதுரைக் காண்டம், கூடற் காண்டம், திருவாலவாய்க் காண்டம் என மூன்றாகப் பகுத்தார். முதலிற் கடவுள் வாழ்த்து, பாயிரம், அவையடக்கம் கூறி, நாட்டுப் படலம், நகரப் படலங் கூறிக் கைலாய வருணனை கூறிப் புராண வரலாறும் விளக்கினர்.

பின் மதுரைக் காண்டத்தில் தலம், தீர்த்தம், மூர்த்திச் சிறப்புக்கூறித் திருவிளையாடல் அறுபத்து நான்கினையும் தொகுத்துரைத்து அதற்குப் பதிகப்படலம் எனப் பெயரிட்டார். பதிகத்திற் கூறிய முறைப்படி 'இந்திரன் பழிதீர்த்தது' முதல் 'வருணன் விட்ட கடலை வற்றச் செய்தது' வரையுள்ள பதினெட்டுத் திருவிளையாடல்களையும் விரித்துரைத்தனர். பின் கூடற் காண்டத்தில், 'நான்மாடக் கூடலானது' முதல் 'நாரைக்கு முத்தி கொடுத்தது' வரையுள்ள முப்பது திருவிளையாடல்களையும் முறையே வகுத்துரைத்தனர். திருவாலவாய்க் காண்டத்தில், 'திருவாலவாயானது' முதல் 'வன்னியுங் கிணறும் இலிங்கமும் அழைத்தது' வரையுள்ள பதினாறு திருவிளையாடல்களையும் முறையே பகர்ந்தனர். முதலில் மதுரை என்று பெயர் பெற்றது முதல் நிகழ்ந்தவைகளை மதுரைக் காண்டத்துள் அடக்கினர். நான்மாடக் கூடல் எனப் பெயர்

பெற்றது முதல் நிகழ்ந்தவைகளைக் கூடற்காண்டத்துட் கூறினர். திருவாலவாய் எனச் சிறப்புப்பெயர் பெற்றது முதல் நிகழ்ந்தவைகளைத் திருவாலவாய்க் காண்டத்துட் செப்பினர். காண்டங்களின் அடைவும் படலங்களின் அடைவும் அவற்றிற்குக் காரணமும் ஆய்ந்து அறிக.

பொருள்

(10) எங்கும் நிறைந்த எல்லாம்வல்ல இறைவன் மக்கட்குத் தெய்வத்தன்மை தெரித்தல் வேண்டிப் பல தலங்களிலும் தன் விளையாடலை அன்பர்கள் காண அருள் செய்தான். மக்களாற் செய்தற்கரிய செயல் ஒன்று ஓரிடத்தில் நிகழ்ந்தால் அதனைத் திருவருட் செயலென்றுதானே கோடல் வேண்டும்! இறைவன் நேர் வந்து நின்று ஒரு செயலும் நிகழ்த்துவதின்றெனினும் வியப்பான செயல் ஒன்று நிகழ்ந்தால் அது தெய்வச் செயலென்றே மக்கள் கருதுவது இயற்கையன்றோ? இம் முறையில் நிகழ்ந்தவையே திருவிளையாடற் கதை யனைத்தும். நம் தமிழ்நாட்டிற் சிவத்தலம் ஒன்று இருந்தால் அங்குத் திருவிளையாடல் ஒன்றிரண்டு நிகழ்ந்த சிறப்பும் அமைந்திருக்கும். திருமால் தலங்களிலும் இவை நிகழ்ந்திருத்தல் காணலாம். நாயனர், ஆழ்வார் எனப் பெயர் பெற்ற தொண்டர்கள் அனைவரும் மக்களாற் செய்தற்கரிய செயல்புரிந்தோரேயாவர். அரிய செயல் நிகழ்ந்த தனிச் சிறப்பான இடங்களையும் அத்தகைய செயல் நிகழ்த்திய பெரியோர்களையும் தமிழ்நாட்டு மக்கள் பண்டைக்கால முதற் பாராட்டிக் கோயில் அமைத்துப் பூசை திருவிழாப் புரிந்து கொண்டாடி வந்தனர், வருகின்றனர், வருவார். ஆயிரத்தெட்டுச் சிவத்தலங்கள் நூற்றெட்டுத் திருப்பதிகள் இருந்தனவெனக் கூறுவதும் அதனை நன்கு விளக்கும். தில்லை, காஞ்சி, முதலிய தலங்களில் நிகழ்ந்த திருவிளையாடல் சில; மதுரையில் நிகழ்ந்தவை போல அருமையான செயல்களும் அல்ல; அறுபத்து நான்கிற் குறைந்தவையே. தருமிக்குப் பொற்கிழியளித்தது, திருமுகங் கொடுத்தது, சங்கப்பலகை தந்தது, இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது, வாதவூரடிகள் பொருட்டுச் செய்த சில விளையாடல்கள் ஆகிய இவை யாவும் தமிழ்மொழிப் பெருமையை விளக்க இறைவனியற்றியவையன்றோ? மதுரைத் திருவிளையாடல் மக்கள் மனத்தப் பதியவேண்டும் என்பது கருதிப் பரஞ்சோதி முனிவர் இந் நூலை யியற்றினர் என எண்ணுக. அறிஞர் அனைவரும் உலகில் நிகழுஞ் செயல் அனைத்தினையும் ஈசன் செயலாகவே கருதுவர். "என்செய லாவதி யாதொன்று மில்லை யினித்தெய்வமே, புன்செய லேயென் றனைப்பெற்றேன்" என்றும், "ஒன்றை நினைக்கி னதுவொழிந் திட்டொன் றாகும், அன்றி யது

வரினும் வந்தெய்தும் - ஒன்றை நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும், எனையாளு மீசன் செயல்" என்றும் கூறிய கவிகள் இதற்குச் சான்றாம். எல்லாம் இறைவன் செயலென்று துணிந்து மக்கள் தத்தங் கடமையை யாற்றி வாழ்வதற்குரிய வழியாக இந்நூற் பொருள் அமைந்துள்ளது.

தகுதியுடையோர்

(11) தெய்வம் ஒன்றென்றும் உண்டென்றும் உறுதி கொண்டவர்; உலகில் நிகழுஞ் செயல்கள் முழுவதும் திருவருட் செயலெனச் சிந்தை வைப்பவர்; மக்கட் பிறப்பின் பயன் இறைவனடி வணங்குதலே என்ற எண்ணமுள்ளோர்; நல்வினை தீவினை புரிந்தோர் அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களை எய்துதல் வாய்மையென மனங்கொண்டவர்; எஞ்ஞான்றும் இறைவனை வணங்கி யியன்ற நல்வினை யியற்றி வாழும் இயல்புடையவர்; தமிழ் மொழியின் தனிச்சிறப் புணர்ந்தவர்; அம் மொழியின் சொற்சுவை, பொருட்சுவை, அருமை, பெருமை, தொன்மை, மென்மை, நன்மை, வனப்பு முதலிய இயற்கைகளை யாய்ந்தவர். நம் நாட்டுப் பண்பாடு, நாகரிகம், கலை, நிலை தெரிந்தவர்; சைவசமயத் தின் தனிச் சிறப்பும் கொள்கையும் அக் கொள்கைவழி நின்ற சான்றோர் வரலாற்றுண்மையும் நுண்மையின் ஆய்ந்து காணும் நோக்கமுடையார் ஆகிய யாவரும் பயில்வதற்குத் தக்கது இந் நூலாகும். மற்றையோர் பயின்றால் நற்பயன் வாய்ப்பது அரிது.

பயன்

(12) இந்நூல் கற்பவர் கேட்பவர் எவரும் தெய்வத் திருவருள் கைவரப் பெறுவர். அன்பு, அருள், வாய்மை, மனத் தூய்மை, நிறை, பொறை, அடக்கம் முதலிய மக்கட் பண்பு வாய்க்கப் பெறுவர். இல்லறமாகிய நல்லற வாழ்விற் சிறந்து அதன் பயனாகிய என்றுங் குன்றாப்பொன்றாப் புகழை எய்துவர். பின்னர்த் துறவறம் பூண்டு விரதமும் ஞானமும் வேண்டிய உள்ளத்தரா யொழுகிச் சித்தியும் முத்தியும் பெற்றுத் திகழ்வ ரென்பது தேற்றம்.

இந் நூலாசிரியர் காலமும் அரங்கேற்றிய காலமும் இந்நூலை இயற்றுதற்குத் தக்க காரணமும் ஆசிரியர் வரலாற்றிற் காண்க.

இந்நூல் பதிப்பித்த முறை

(13) இந்நூல் மூலமட்டும் தமிழ்மொழிக்கும் சைவ சமயத்திற்கும் உழைத்த நம் பெரியார் யாழ்ப்பாணம் உயர்திரு ஆறுமுக நாவலரவர்களால் முதலிற் பதிப்பிக்கப் பெற்றது. பின்னர்த் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் மாண

வரில் ஒருவராகிய சோடசாவதானம் சுப்பராயச் செட்டியாரவர்கள் இந் நூலுக்கு உரை யெழுதி அச்சிட்டு வெளிப்படுத்தனர். அதன்பின்னர் அவ்வுரையையே பெரிதும் தழுவி ஈக்காடு இரத்தினவேலு முதலியார் என்பவரால் பொழிப்புரை யெழுதப்பட்டுப் புதிதாக வெளிவந்தது. மதுரை இராமசுவாமிப் பிள்ளையவர்கள் மதுரைக்காண்டத்திற்கு மட்டும் பொழிப்புரை எழுதி வெளிப்படுத்தினர். சிலகாலஞ் சென்றபின் திருவிளையாடற் புராணம் உரையுடன் கிடைப்பது அரிதாகத் தோன்றியது.

தமிழ்மொழி நூல்கள் அனைத்தையும் அச்சிட்டு அழகிய வடிவிற் புத்தகமாக்கி வழங்கித் தமிழ்மொழியையும் சைவ சமயத்தையும் வளர்த்துப் பேணிவரும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக அமைச்சர் ஆகிய திருவாளர் வ. திருவரங்கம்பிள்ளை யவர்கள் அந் நூலின் அருமையை யறிந்தனர். திருவிளையாடற் புராணம் முழுவதுக்கும் நன்முறையில் உரையெழுதி வெளியிடுவது நம் நாட்டுக்கு நன்மை பயக்குஞ் செயல் எனச் சிந்தித்துத் தெளிந்தார். இலக்கணம், இலக்கியம், சமய நூல் முதலிய பல நூல் கற்றுத் தேர்ந்த ஆசிரியர் பண்டித. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களுக்குத் தெரிவித்து உரை வரைந்துதவும்படி வேண்டினர். அவர் அதற்கிணங்கி மூன்று காண்டங்கட்கும் நல்லுரை வரைந்துதவினர். அவ்வுரையுடன் அச்சிட்டு மதுரைக்காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க்காண்டம் என்ற மூன்றினையும் மூன்று புத்தகமாகப் பகுத்து 1927 இல் வெளியிட்டுதவினர். அன்று முதல் இன்று வரை தமிழ் கற்பார்க்கும் கற்பிப்பார்க்கும் அவ்வுரையுடன் கூடிய புத்தகம் நற்பயனுதவி யெங்கும் உலவி வருவது எவர்க்குந் தெரிந்ததே.

### நூற் பெருமை

(14) திருவிளையாடல் நூல்களிற் சிறப்புடையது பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணமே. வேம்பத்தூரார் திருவிளையாடல் என்பது காலத்தால் இதற்கு முற்பட்டது. பழைய தமிழ் வழக்குக்களையே தழுவிச் செல்வது. இது பிற்பட்டது; வடமொழி வழிவந்தது; வடமொழிப்பெயர்களையே பாண்டியர்களுக்கும் கடவுளர்களுக்கும் இட்டு வழங்குவது. இவ் வேறுபாடு இருப்பினும் முனிவர் பாடல் இனிமையும் தெளிவு முடையது. மோனையெதுகை முதலிய தொடைநயங்கள் அமைந்தது. பத்திச்சுவை கனிந்தது. ஒழுகிய வோசையும் விழுமிய பொருளும் அமைந்து கற்பார்க்கு மேன்மேலும் விழைவெழுப்புவது. இதனாலன்றோ நம்பி திருவிளையாடல் கற்பார் சிலரும் இதனைக் கற்பார் பலரும் ஆயினர்.

**எடுத்தாண்ட பழைய இலக்கியப் பகுதி**

(15) பரஞ்சோதி முனிவர் பல நூற் பயிற்சியுடையவர் என்பது அவர் இயற்றிய திருவிளையாடலால் அறியலாம். கலித் தொகை என்னும் நூலில் "வையைதன், நீர்முற்றி மதில் பொருஉம் பகையல்லா னேராதார், போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்" என வந்துள்ளது. இதன் பொருள் "வையை யாற்றுநீர் சூழ்ந்து கோட்டை மதிலைப் பொருகின்ற இப்பகையன்றிப் பகைவர் சூழ்ந்து மதிலை வளைத்துப் போர் செய்வதை யறியாத புனலையுடைய மதுரையையுடையவன்" என்பது. இப் பொருளை ஆசிரியர், மதுரைநகர் மதிற் சிறப்புக் கூறும் இடத்தில் "அம்மதில் திரைக்கரந் துழாவி, அகழ வோங்குநீர் வையையா லல்லது வேற்றுப் பகைவர் சேனையாற் பொரப்படும் பாலதோ வன்றே" என அமைத்தனர்.

சீவக சிந்தாமணியில் "கோட்டிளந்தகர்களும் கொய்ம்மலர்த் தோன்றிபோற், சூட்டுடைச் சேவலும்" எனவும், "பொருவில் யானையின் பழுப்போற் பொங்குகாய்க் குலையவரை" எனவும், "முட்டிலா மூவறுபாடை மாக்களாற் புட்பயில் பழுமரப் பொலிவிற் றாகிய" எனவும், "புதுக்கலம் போலும் பூங்கனியால்" எனவும், திருத்தக்கதேவர் கூறிய உவமை பொருள்களை ஆசிரியர் இந் நூலில் "கொய்ம்மலர்க் குடுமிச் சேவல் கோழிளந் தகர் போர் முட்டி" எனவும், "ஆறிடுமதமால் யானைப் பழுக்குலை யவரை", எனவும், "பாய தொன்மரப் பறவைபோற் பயன் கொள்வான் பதினெண், டேய மாந்தருங் கிளந்தசொற் றிரட்சி தான்" எனவும், "கலம்பெய்காட்சி போலுதிர் பழம்" எனவும், முறையே அமைத்திருப்பவற்றைக் காண்க.

"தீயில் வீழ்கிலேன் றிண்வரை யுருள்கிலேன்" என்பதனை, "வஞ்சவினைக் கொள்கலனு முடலைத் தீவாய் மடுக்கிலேன் வரையுருண்டு மாய்ப்பே னல்லேன்" எனவும், "மழக்கையிலங்கு பொற்கிண்ண மென்றலாலரியை யென்றுனைக் கருதுகின்றிலேன்" என்பதனை, "மழலைதேரச், சிறியனு மொருதலை கையிற் கொண்ட செம்பொன்மணி வள்ளம்போற் றேவர் யார்க்கும், அறிவரியாய் சிறியேனை யெளிவந்தாண்ட அருமையறியேன்" எனவும், "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" என்பதனை, "முன்னு முதுபொருட்கு முன்னு முதுபொருளாய்ப், பின்னும் புதுமைக்கும் பின்னுதும் பேரொளியாய்" எனவும், "வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி, ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்" என்பதனை, "மண்ணாய்ப் புனலாய்க் கனலாய் வளியாகி, விண்ணா யிருசுடரா யித்தனையும் வேறாக்" எனவும்

மணிவாசகர் திருவாசகப் பகுதிகளை ஆசிரியர் பெடுத்தாண்டிருப்பது காண்க.

கம்பர் பாடிய இராமாவதாரத்தில் வந்துள்ள "நஞ்சினுங் கொடிய காட்ட மழுதினும் நயந்து நோக்கிச், செஞ்சவே கமலக் கையாற் றீண்டலும் தீண்ட கொம்பர், தஞ்சிலம் படியின் மென்பூச் சொரிந்துடன் தாழ்ந்த தென்றால், வஞ்சிபோன் மருங்குலார்மாட் டியாவரோ வணங்க லாதார்" என்ற கவியின் கருத்தினை "இம்பர்வீ டளிக்கும் தெய்வ மகளிரே என்பார் கூற்றம், வம்பல மெய்யே போலும் வலைக்கையார் வலைப்பத் தாழ்ந்து, கம்பமுற் றடிப்பூச்சிந்தி மலர்முகங் கண்ணீர் சோரக், கொம்பரும் பணிந்த வென்றூ லுலகியல் கூறற் பாற்றோ" என்ற கவியில் இவர் பொருத்தியிருப்பது காண்க. இன்னும் பல நூற் கருத்துக்களும் பொருள்களும் பல விடங்களில் வந்துள்ளன. இவை இவரது புலமையாற்றலை பெடுத்துக் காட்டுவனவாம்.

## கதைச் சுருக்கம்

(1) **திருவாலவாயான படலம் :** கீர்த்தி பூடண பாண்டியன் மதுரையாண்ட நாளில் கருங்கடலேழும் திரண்டெழுந்து வந்து வெள்ளமாகிப் புவியனைத்தையும் மூடி யழித்தொழித்தது. பின் வெள்ளம் வற்றியபோது மதுரையில் அங்கயற்கண்ணி திருக்கோயிலும், இந்திர விமானமும், பொற்றாமரை வாவியும், இடபக் குன்றமும், யானைமலையும், நாகமலையும், பசுமலையும், பன்றி மலையும் அழிவின்றியிருந்தன. வங்கிய சேகரன் பிறந்து வளர்ந்து ஆளத்தொடங்கினன். ஆதியின் மதுரை நகரமைந்திருந்த எல்லை காணக் கருதி இறைவனை இறைஞ்சினன். இறைவன் ஒரு சித்தராய் வந்து தங் கங்கணமாக அமைந்திருந்த பாம்பினை ஏவி எல்லை காட்டும்படி பணித்தார். அப் பாம்பு உடலை வளைத்து வாயில் வால் பொருந்தும்படி புரிந்து முன்னுள்ள எல்லையைத் தன் ஆலவாயான் அளந்து காட்டியது. அன்று முதல் ஆலவாய் எனச் சிறப்புப் பெயர் பெற்றது.

(2) **சுந்தரப்பேரம் பெய்த படலம் :** வங்கியசேகர பாண்டியன் அரசு புரிந்தபோது விக்கிரம சோழன் என்பவன் போர் புரியக் கருதி வந்து, நிரை கவர்ந்து, குளம் ஏரிகளையுடைத்துப் பல குறும்பு செய்தனன். சோழனது படைப் பெருமை கண்டு, பாண்டியன் அஞ்சி, இறைவனை வணங்கிக் குறையிரந்து வேண்டினன். அப்போது இறைவன் "நீ சென்று, வந்த சோழனுடன் போர் புரிவாய்; நாம் வந்து உதவி புரிவோம். வெற்றி உனக்குக் கிட்டும்" என்று அசரீரியாய் நின்று கூறினன். கூறியபடியே

உ

திருச்சிற்றம்பலம்

# திருவிளையாடற் புராணம்

மூலமும் உரையும்

---

## ௫. திருவாலவாய்க் காண்டம்

நாற்பத்தோன்பதாவது

### திருவாலவாயான படலம்

[ அறுசீரடியாசிரிய விருத்தம் ]

பாயுடையார் விடுத்தபழி யழல்வழுதி
யுடல்குளிப்பப் பதிக மோதும்
சேயுடையா ரணந்திளைக்குஞ் செவியுடையா
ரளவிறந்த திசைக ளேட்டுந்
தோயுடையார் போன்னிதழித் தோடையுடையார்
விடவரவஞ் சுற்று மால
வாயுடையார் புகழ்பாடப் பேறுவேமேல்
வேண்டுவதிம் மனித யாக்கை.

(இ-ள் போருள்.) பாய் உடையார் விடுத்த பழி அழல் - பாயை ஆடையாகவுடைய அமணர் (தமது திருமடத்தின்கண்) வைத்த பழிக்கு ஏதுவாகிய நெருப்பு, வழுதி உடல் குளிப்ப-பாண்டியனுடலிற் சென்று பற்றுமாறு, பதிகம் ஓதும் - திருப்பதிகம் பாடியருளும், சேய் உடை ஆரணம் திளைக்கும் செவியுடையார் - ஆளுடைய பிள்ளையாரின் தமிழ் மறையை இடையறாது நுகருஞ் செவியினையுடையாரும், அளவு இறந்த திசைகள் எட்டும் தோய் உடையார் - எல்லையின்றிப் பரந்த எட்டுத் திக்குகளையும் பொருந்திய ஆடையாக வுடையாரும், போன் இதழித் தொடை உடையார்-பொன்போன்ற கொன்றைமாலையை யுடையாரும், விட அரவம் சுற்றும் ஆலவாய் உடையார்-நஞ்சினையுடைய பாம்பினாற் கோலி வரையறுக்கப்பட்ட திருவாலவாயினை யுடையாருமாகிய சோம சுந்தரக் கடவுளின், புகழ் பாடப் பெறுவேமேல்-புகழைப்பாடும் பேறு பெறுவேமானால், இம்மனித யாக்கை வேண்டுவது - இந்த மனித்த வுடம்பு வேண்டுவதே யாகும்.

அழல் வழுதியுடல் குளிப்பப் பதிகமோதிய வரலாற்றை மேல் பாண்டியன் சுரந்தீர்த்த படலத்திற் காண்க. சேய் - பிள்ளையார். சேயுடை யாரணம் என்புழி ஆறுவது செய்யுட்கிழமைக்கண் வந்தது; கபிலரது பாட்டு என்புழிப்போல. திசைகள் எட்டும் தோயுடையார் - திகம்பரர்.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேனெடுங் காலமே"

"குனித்த புருவமுங் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே"

என்னும் திருநாவுக்கரசர் திருப்பாட்டுக்கள் இங்கே சிந்திக்கற்பாலன.()

வேதனெடு மாலாதி விண்ணுடர்
மண்ணுடர் விரத யோகர்
மாதவர்யா வருங்காண மணிமுறுவல்
சிறிதரும்பி மாடக் கூடல்
நாதனிரு திருக்கரந்தொட் டம்மியின்மேல்
வைத்தகய ஞெட்டச் செல்வி
பாதமல ரேழுபிறவிக் கடனீந்தும்
புணையென்பர் பற்றி லாதோர்.

(இ - ள்.) வேதன் நெடுமால் ஆதி விண்ணுடர் - பிரமனும் நெடிய ஆகிய திருமாலும் முதலிய தேவர்களும், மண்ணுடர் - புவியிலுள்ளாரும், விரதயோகர் மாதவர் யாவரும் - அரிய நோன்பினை மேற்கொண்ட சிவயோகியரும் பெரிய தவத்தினையுடைய முனிவரும் ஆகிய அனைவரும், காண - காணும்படி, மாடக்கூடல் நாதன் - நான்மாடக் கூடலின் நாயகனாகிய சோமசுந்தரக் கடவுள், மணிமுறுவல் சிறிது அரும்பி - அழகிய புன்னகை முகிழ்த்து, இரு திருக்கரம் தொட்டு - இரண்டு திருக்கரங்களாலும் தீண்டி, அம்மியின்மேல் வைத்த - அம்மியின்மேல் வைத்தருளப்பெற்ற, கயல்நாட்டச் செல்வி பாதமலர் - அங்கயற்கண்ணம்மையின் திருவடி மலர்களை, பற்று இலாதோர் - இருவகைப் பற்றுமற்ற பெரியோர், எழுபிறவிக் கடல்நீந்தும் புணை என்பர் - எழுவகைப்பட்ட பிறவியாகிய கடலைக் கடப்பதற்குரிய நாவாய் என்று கூறுவார்.

அம்மியின்மேல் வைத்தமை முன் திருமணப்படலத்திற் காண்க. வைத்த பாதமலர் என்க. பிறவி ஏழாவன தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. பிறவி காரண காரியத் தொடர்ச்சியாய் அறுதியாக வந்து கொண்டு இருத்தலின் அளவிடப்படாத தென்பார், 'கடல்' என்றார். பற்றிலாதோர் - எவ்வகைப் பற்றுமற்று இறைவன் திருவடியைப் பற்றி நின்றோர்;

"முற்று வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்றி னின்றாரைப் பற்றா பாவமே"

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்"

என்னும் மறைமொழிகள் இங்கே கருதற் பாலன. (௨)

[வேறு]

ஓலவாய் மறைக டேறா வொருவன்றன் னுலகந் தன்னைச்
சேலவா யுழலு நாரைக் கருளிய செயலீ தம்ம
நீலவாய் மணிசேர் கண்ட னெடியநான் மாடக் கூடல்
ஆலவா யாகச் செய்த வருட்டிற மெடுத்துச் சொல்வாம்.

(இ-ள்.) வாய் ஓலம் மறைகள் தேறா ஒருவன் - வாய் திறந்து ஓலமிடும் மறைகளும் தெளியாத இறைவன், தன் உலகம் தன்னை - தனது சிவலோகத்தை, சேல் அவாய் உழலும் நாரைக்கு அருளிய செயல் ஈது - சேல்மீனை விரும்பிச் சுழன்று திரியும் நாரைக்கு அருளிய திருவிளையாடல் இதுவாகும்; நீலம் வாய்மணி நேர் கண்டன் - நீலநிறம் வாய்ந்த மணியினை ஒத்த திருமிடற்றையுடைய அவ்விறைவன், நெடிய நான் மாடக்கூடல் - நீண்ட நான்மாடக்கூடலை, ஆலவாயாகச் செய்த அருள் திறம் - திருவாலவாயாகச் செய்த திருவிளையாடலை, எடுத்துச் சொல்வாம் - (இனி) எடுத்துக் கூறுவாம்.

ஓலமிடுதல் - முறையிடுதல்;

"அருமறை முறையிட் டின்னு மறிவதற் கரியான்"

எனவும்,

"மயக்கறு மறையோ லிட்டு மாலயன் றேட நின்றான்"

எனவும் திருத்தொண்டர் புராணம் கூறுதல் காண்க. ஓலம், நீலம் என்பன ஈறுகெட்டன. அம்ம: இடைச்சொல். (௩)

சித்திர மேரு வென்ற திரண்டதோட் சுகுணன் பின்பு
சித்திர விரதன் சித்ர பூடணன் றிண்டேர் வல்ல
சித்திர துவசன் வென்றிச் சித்திர வருமன் வன்றோட்
சித்திர சேனன் சீர்சால் சித்ரவிக் கிரம னென்போன்.

(இ-ள்.) சித்திரம் மேரு வென்ற திரண்டதோள் சுகுணன் பின்பு - அழகிய மேருமலையை வென்ற திரண்ட தோள்களையுடைய சுகுண பாண்டியனுக்குப் பின், சித்திர விரதன் - சித்திர விரதனும், சித்திர பூடணன் - சித்திர பூடணனும், திண்தேர் வல்ல சித்திரத் துவசன் - வலிய தேர்ப்போரில் வல்ல சித்திரதுவசனும், வென்றிச் சித்திர வருமன் - வெற்றி பொருந்திய சித்திரவருமனும், வன்தோள் சித்திரசேனன் - வலிய தோள்களையுடைய சித்திரசேனனும், சீர்சால் சித்ரவிக்கிரமன் என்போன் - சிறப்பு அமைந்த சித்திரவிக்கிரமன் எனப்படுவானும்,

...ர என்பது ...ம்பியற்கு மாறுயினும் ...நோக்கித் திரியாது ...: விக்கிரம பராக்கிரம என்பதும் அது. (சா)

மணிகெழு தேரி ராச மார்த்தாண்ட னிராச சூடா
மணியணி முடியி ராச சார்த்தூல வழுதி சிந்தா
மணிநிகர் துவிச ராச குலோத்தமன் மடங்கா வென்றி
மணித்திகழ் பொலம்பூ ணாயோ தனப்பிர வீணன் மன்னே.

(இ - ள்.) மணிகெழு தேர் இராசமார்த்தாண்டன் - மணிகள் ... தேரினையுடைய இராசமார்த்தாண்டனும், இராச சூடாமணி - ... சூடாமணியும், அணி முடி இராசசார்த்தூலவழுதி - அழகிய முடி... இராசசார்த்தூல பாண்டியனும், சிந்தாமணி நிகர் துவிச ... குலோத்தமன் - சிந்தாமணி போன்ற கொடையினையுடைய ... குலோத்தமனும், மடங்கா வென்றி மணிதிகழ் பொலம் பூண் ... ஆயோதனப் பிரவீணன் - மடங்காத வெற்றியையும் மணிகள் பதிக்... விளங்கும் பொன்னணிகலனையு முடைய ஆயோதனப் பிர...ணும்.

...ராமணி-சிந்தித்தவற்றைக் கொடுக்கும் ஒரு தெய்வமணி. ஆயோ...தனம் - போர். பிரவீணன் - வல்லவன். மன்னும் ஏயும் அசைநிலை. (கு)

இயம்பருந் திறலி ராச குஞ்சரன் பரவி ராச
பயங்கரன் கைக்கும் பைந்தா ருக்கிர சேனன் பாரைச்
சயங்கெழு தோண்மே லேந்து சத்துருஞ் சயன்வி மத்தேர்
வயங்கெழு மன்னன் விம பராக்ரம வழுதி மாதோ.

(இ - ள்.) இயம்பரும் திறல் இராச குஞ்சரன் - சொல்லுதற்கரிய வெற்றியையுடைய இராசகுஞ்சரனும், பரவிராச பயங்கரன் - பரவிராச பயங்கரனும், கைக்கும் பைந்தார் உக்கிரசேனன் - கசக்கும் பசிய வேப்ப மலர் மாலையை யணிந்த உக்கிரசேனனும், பாரை சயம் கெழு தோள் மேல் ஏந்து சத்துருஞ்சயன் - புவியை வெற்றி பொருந்திய தோளின் மேல் தாங்கிய சத்துருஞ்சயனும், வயம் கெழு விமத்தேர் மன்னன் - வெற்றி பொருந்திய விமரதன் என்னும் வேந்தனும், விமபராக்ரமவழுதி- விமபராக்கிரம பாண்டியனும்.

மாது, ஓ : அசைகள். (௬)

பெய்வளை விந்தை சேர்ந்த பிரதாப மார்த்தாண் டப்பேர்த்
தெவ்வடு சிலையான் றேர்விக் கிரமகஞ் சுகன்றே ரார்போர்
வெளவிய சமர கோலா கலனெனும் வாகை வேலான்
அவ்விய மவித்த சிந்தை யதுலவிக் கிரம னென்பான்.

(இ - ள்.) பெய்வளை விந்தை சேர்ந்த பிரதாப மார்த்தாண்டப் பேர் - இட்டவளையலையுடைய வீரமகள் அணைந்த பிரதாப மார்த்தாண்டனென்னும் பெயரினையுடைய, தெவ் அடு சிலையான் - பகைவரைக் கொல்லும் வில்லினையுடையானும், தேர் விக்கிரம கஞ்சுகன் - தேரை யுடைய விக்கிரமகஞ்சுகனும், தெரார் போர் வெளவிய - பகைவர் போர் வலியைக் கவர்ந்த, சமர கோலாகலன் எனும் வாகை வேலான் - சமர

கோலாகலன் என்னும் வெற்றி வேலையுடையானும், அவ்வியாள் தந்த பிள்ளை அதுல விக்கிரமன் என்பான்-பொறுமையை ஒழித்த வன்மை யுடைய அதுல விக்கிரமன் எனப்படுவானும்.

தெவ்வார் - பகைவர். (௪)

எழில்புனை யதுல கீர்த்தி யெனவிரு பத்தி ரண்டு
வழிவழி மைந்த ராகி வையங் காத்த வேந்தர்
பழிதவி ரதுல கீர்த்தி பாண்டியன் றன்பா லின்பம்
பொழிதர வுதித்த கீர்த்தி பூடணன் புரக்கு நாளில்

(இ - ள்.) எழில் புனை அதுலகீர்த்தி என - அழகு மிக்க அதுல கீர்த்தியும் என்று, இருபத்திரண்டு மைந்தர் வழிவழி ஆகி - இருபத்திரண்டு மைந்தர்கள் வழி வழியாகத் தோன்றி, வையகம் காத்த வேந்தர் - இந்நிலவுலகை ஆண்ட அவ்வேந்தருள், பழிதவிர் அதுலகீர்த்தி பாண்டியர் தன்பால் - பழி நீங்கிய அதுலகீர்த்தி என்னும் பாண்டியனிடத்து, இன்பம் பொழிதர உதித்த - இன்பம் மிகும்படி தோன்றிய, கீர்த்திபூடணன் புரக்கும் நாளில் - கீர்த்திபூடண பாண்டியன் செங்கோலோச்சிவரும் காலையில்.

இருபத்திரண்டு மைந்தர் வழிவழித்தோன்றி வையகம் புரந்தார். அங்ஙனம் புரந்த வேந்தருள் என விரித்துரைத்துக் கொள்க. பொழிதல் - ஈண்டு இன்பம் பொழிதலும் மிகுதலை உணர்த்தின. (௫)

கருங்கட லேழுங் காவற் கரைகடந் தார்த்துப் பொங்கி
ஒருங்கெழுந் துருத்துச் சீறி யும்பரோ டிம்ப ரெட்டுப்
பொருங்கட கரியு மெட்டுப் பொன்னெடுங் கிரியு நேமிப்
பெருங்கடி வரையும் பேரப் பிரளயங் *கோத்த வன்றே.

(இ - ள்.) கருங்கடல் ஏழும் - கரிய கடல்கள் ஏழும், ஒருங்கு பொங்கி எழுந்து - ஒருசேரப் பொங்கி மேலெழுந்து, உருத்துச் சீறி ஆர்த்து - வெகுண்டு சீறி ஆரவாரித்து, காவல் கரை கடந்து - காவலாகிய எல்லையைக் கடந்து, உம்பரோடு இம்பர் - விண்ணுலகும் மண்ணுலகும், பொரும் எட்டு கடகரியும் - போர்செய்யும் மதத்தையுடைய எட்டு யானைகளும், நெடும் பொன் எட்டுகிரியும் - பெரிய பொன்மயமான எட்டு மலைகளும், பெருங்கடி நேமி வரையும் - பெரிய அச்சத்தைத் தரும் சக்கரவாள கிரியும், பேர - நிலைபெயருமாறு, பிரளயம் கோத்த - பிரளயமாக ஒன்றோடொன்று கோத்தன.

கருமை - பெருமையுமாம். உருத்துச்சீறி: ஒருபொருட் பன்மொழி. கடி - காவலுமாம். அன்று, ஏ: அசைகள். (௬)

அப்பெருஞ் சலதி வெள்ளத் தழுந்தின் வழியி லாது
எப்பெரும் பொழிலு மேழு தீபமு மிவற்றுட் டங்கி
நிற்பன செல்வ வான திணைகளு நீண்ட செல்லாப்
பர்ப்பத வகையு மீறு பட்டன வாக வங்கண்

(பாடம்.) *கோத்த தன்றே.

(இ - ள்.) அப்பெருஞ் சலதிவெள்ளத்து அழுந்தின - அந்தப்பெரிய கடல் வெள்ளத்துள் மூழ்கி, அழிவு இலாத எப்பெரும் பொழிலும் - அழிவில்லாத எத்துணைப் பெரிய பூமியும், ஏழு தீபமும் - ஏழு தீவுகளும், இவற்றுள் தங்கி நிற்பன செல்வ ஆன திணைகளும் - இவைகளிலே தங்கி நிற்பனவும் செல்வனவுமாகிய பொருள்களும், நீண்ட சென்னிப் பர்ப்பத வகையும் - உயர்ந்த முடிகளையுடைய மலைவகைகளும், ஈறு பட்டனவாக - ஒழிந்தனவாக; அங்கண் - அப்பொழுது.

அழுந்தின : முற்றெச்சம். பொழில் - உலகம்.

இஃது இப்பொருட்டாதலை,

"செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன்"

என்னும் திருவாசகத்திற் காண்க. நிற்பனவான திணை - நிலைத்திணை. செல்வவான திணை - இயங்குதிணை. திணை - குலம். (கo)

தேனிழி குதலைத் தீஞ்சொற் சேனெடுங் கண்ணி கோயில்
வானிழி விமானம் பொற்று மரைவிளை யாட்டின் வந்த
கானிழி யிடபக் குன்றங் கரிவரை நாகக் குன்றம்
ஆனிழி வரைவ ராக வரைமுத லழிவி லாத.

(இ - ள்.) தேன் இழி குதலைத் தீஞ்சொல் - தேன் ஒழுகும் இனிய குதலைச் சொல்லையுடைய, சேல் நெடுங் கண்ணி கோயில் - சேல்போலும் நீண்ட விழிகளையுடைய உமையம்மையின் திருக்கோயிலும், வான் இழி விமானம் - வானினின்றும் இறங்கிய இந்திரவிமானமும், பொற்றாமரை - பொற்றாமரை வாவியும், விளையாட்டின் வந்த கான் இழி இடபக்குன்றம் - இறைவன் திருவிளையாட்டினால் வந்து தங்கிய மணம்வீசும் (சோலைகளையுடைய) இடபமலையும், கரிவரை - யானைமலையும், நாகக்குன்றம் - நாகமலையும், ஆன் இழிவரை - பசுவின் உருத்திரிந்த பசுமலையும், வராக வரை - பன்றிமலையும், முதல் - முதலிய இடங்கள், அழிவு இலாத - (அந்நீரினால்) அழியாதனவாயின.

தேன் இழி என்பதற்குத் தேனும் புறங்கொடுக்கும் என்றுரைத்தலுமாம். சேல் நெடுங்கண்ணி - அங்கயற்கண்ணம்மை. கான் இழி சோலைகளையுடைய என வருவித்துரைக்க. முதல் - முதலான. ஆக்கச்சொல் விரித்து அழிவிலாதனவாயின என்க. (கக)

வெள்ளநீர் வறப்ப வாதி வேதியன் ஞால முன்போல்
உள்ளவா றுதிப்ப நல்கி யும்பரோ டிம்ப ரேனைப்
புள்ளோடு விலங்கு நல்கிக் கதிருடற் புத்தேண் மூவர்
தள்ளரு மரபின் முன்போற் றமிழ்வேந்தர் தமையுந் தந்தான்.

(இ - ள்.) வெள்ள நீர் வறப்ப - பிரளயநீர் வற்ற, ஆதிவேதியன் - சிவபெருமான், முன் உள்ளவாறுபோல் ஞாலம் உதிப்ப நல்கி - முன் இருந்த தன்மை போலவே உலகந் தோன்றுமாறு அருள் புரிந்து,

உம்பரோடு இம்பர் ஏனைப் புள்ளொடு விலங்கு நல்கி - தேவர்களையும் மக்களையும் மற்றைப் பறவைகளையும் விலங்குகளையும் தோற்றுவித்து, சுடர் படைல் புத்தேள் மூவர் தள் அரு மரபின் - ஒளி வடிவமுடைய சந்திரனும் சூரியனும் திக்கடவுளுமாகிய மூவரின் தள்ளுதற்கரிய மரபில், முன்போல் தமிழ் வேந்தர்தமையும் தந்தான் - முன்போலவே மூன்று தமிழ் மன்னர்களையும் தந்தருளினன்.

போல், அசையுமாம். உம்பர், இம்பர் என்பன அவ்விடங்களி லுள்ளாரை உணர்த்தின. திங்கள் மரபினர் பாண்டியரும், ஞாயிற்றின் மரபினர் சோழரும், அங்கி மரபினர் சேரரும் ஆம். (௩௨)

[கலி விருத்தம்]

அங்கியை மதிமர பென்னு மாழியுட்
டங்கிய கலையெணான் கிரட்டி தன்னொடும்
பொங்கிய நிலாமதி போலத் தோன்றினான்
வங்கிய சேகர வழுதி மன்னனே.

(இ - ள்.) அங்கு இயை மதி மரபு என்னும் ஆழியுள் - அங்ஙனம் பொருந்திய சந்திரன் மரபாகிய கடலுள், தங்கிய எண்ணான்கு இரட்டி கலையொடும் - பொருந்திய அறுபத்துநான்கு கலைகளோடும், பொங்கிய நிலாமதிபோல - விளங்கித் தோன்றிய நிலவினையுடைய சந்திரன் போல, வங்கிய சேகரவழுதி மன்னன் தோன்றினான்-வங்கிய சேகரபாண்டியன் என்னும் வேந்தன் தோன்றினான்.

தொடக்கமும் ஈறும் தோன்றுது நெடிதாய் வருதலின் மதிமரபை ஆழியாக உருவகித்தார். இவன் அறுபத்துநான்கு கலையும் நிரம்பினன் ஆகலின் எண்ணான்கிரட்டி கலையொடும் பொங்கிய மதிபோல என்றார்: இஃது இல்பொருளுவமை. வங்கியம் - வம்சம். (௩௩)

தாளணி கழலினான் றங்க ணாயகன்
கோளணி புரிசைசூழ் கோயில் சூழவோர்
வாளணி கடிநகர் சிறித மைகவைத்
தாளரி யேறென வவனி காக்குநாள்.

(இ - ள்.) தாள் அணி கழலினான் - காலிற் கட்டிய வீரக்கழலை யுடைய அவ்வேந்தன், தங்கள் நாயகன் - தங்கள் தலைவனாகிய சோம சுந்தரக் கடவுளின், கோள்அணி புரிசைசூழ் கோயில் சூழ - ஒன்பது கோள்களுந் தவழும் மதில் சூழ்ந்த திருக்கோயிலைச் சூழ, ஓர் வாள் அணி கடிநகர் சிறிது மைகவைத்து - ஒளி பொருந்திய காவலையுடைய ஒரு நகரைச் சிறிதாக ஆக்கிக்கொண்டு, ஆளரி ஏறென அவனி காக்கு நாள் - சிங்கவேறு போலப் புவியைப் பாதுகாத்து வரும் நாளில்.

கோள் அணிபுரிசை - கோட்களை அணிந்த மதில்; மதிலின் உயர்ச்சி கூறியவாறு. மைக வைத்து - பொருந்த வைத்து; ஆக்கி என்றபடி. (௩௪)

செய்யகோன் மனுவழி செலுத்து நீர்மையாற்
பொய்கெழு கலிப்பகை புறந்தந் தோடத்தன்
வையகம் பல்வளஞ் சுரப்ப வைகலும்
மெய்கெழு மன்பதை மிக்க வாலரோ.

*(இ - ள்.) செய்ய கோல் மனுவழி செலுத்தும் நீர்மையால் - செங்கோலை மனுவறத்தின் வழியே ஓச்சுகின்ற தன்மையால், பொய்கெழு கலிப்பகை புறந்தந்து ஓட - பொய் மிக்க கலி என்னும் பகைவன் புறங்காட்டி ஓட, தன் வையகம் வைகலும் பல்வளம் சுரப்ப - தன் நாடு நாள்தோறும் பல வளங்களையுஞ் சுரத்தலால், மெய்கெழு மன்பதை மிக்க - உண்மை மிக்க மக்கட்கூட்டங்கள் (நாள்தோறும்) மிக்கன.*

*கலி - வறுமை முதலிய தீமை. வைகலும் என்பதனை சுரத்துங் கூட்டுக. ஆல், அரோ : அசைகள்.* (கரு)

பல்குறு மானிடப் பரப்பே லாமொருங்
கல்குற விடங்குறை வாக வாய்மதுப்
பில்குறு தாரினன் பிறைமு டித்தவன்
மல்குறு கோயிலின் மருங்க ரெய்தினன்.

*(இ - ள்.) பல்குறும் மானிடப் பரப்பு எலாம் - (அங்ஙனம்) பல்கிய மக்கட் பரப்பு அனைத்தும், ஒருங்கு அல்குற இடம் குறைவாக - ஒருங்கு தங்குவதற்கு இடம் குறைவுபட, ஆய்மதுப் பில்குறு தாரினன் - (வண்டுகள்) ஆராயுந் தேன்பிலிற்றும் மாலையையுடைய பாண்டியன், பிறைமுடித்தவன் மல்குறு கோயிலின் மருங்கர் எய்தினன் - பிறையை யணிந்த சோமசுந்தரக் கடவுள் வீற்றிருந்து விளங்குந் திருக்கோயிலின் பக்கத்தை அடைந்தனன்.*

*உறுதல் எல்லாம் துணை வினை. வண்டு ஆயும் என விரிக்க. மல்குதல் - விளங்குதல்மேற்று. மருங்கர் : ஈற்றுப்போலி.* (கசு)

கறையணி கண்டனைத் தாழ்ந்து கைதொழு
திறையவ நின்னருள் வலியி னிந்நிலப்
பொறையது வாற்றுவேற் கீண்டிப் போதொரு
குறையதுண் டாயின தென்று கூறுவான்.

*(இ - ள்.) கறை அணி கண்டனைத் தாழ்ந்து - நஞ்சக்கறையினை அணிந்த திருமிடற்றினையுடைய இறைவனை வணங்கி, கைதொழுது - கைகூப்பி, இறைவ - தலைவனே, நின் அருள் வலியின் - நினது அருள் வலியினால், இந்நிலப் பொறையது ஆற்றுவேற்கு - இந்நிலச் சுமையைத் தாங்கிவந்த எனக்கு, ஈண்டு இப்போது ஒரு குறையது உண்டாயினது என்று கூறுவான் - இங்கு இப்பொழுது ஒருகுறை உண்டாயிற்றென்று அதனைக் கூறுவானாயினன்.*

*பொறையது, குறையது என்பவற்றில் அது பகுதிப்பொருள் விகுதி.* (கஎ)

இத்தனை மாக்களு மிருக்கத் தக்கதாப்
பத்தனங் காணவிப் பதிக்க ணாதியே
வைத்தறை செய்திடும் வரம்பு காண்கிலேன்
அத்தமற் றதனையின் றறியக்காட் டென்றான்.

(இ - ள்.) *இத்தனை மாக்களும் இருக்கத் தக்கதா - இவ்வளவு மக்களும் இருக்கத் தகுதியுடையதாக, பத்தனம் காண - ஒரு நகரினை ஆக்குவதற்கு, இப்பதிக்கண் ஆதியே வைத்து அறைசெய்திடும் வரம்பு காண்கிலேன் - இந்நகரின்கண் ஆதிகாலத்திலிருந்து வரையறுத்து வைத்த எல்லையை அறியேன்; அத்த அதனை இன்று அறியக்காட்டு என்றான் - (ஆதலால்) அத்தனே அவ்வெல்லையை இன்று யான் அறியுமாறு காட்டியருள்வாயாக வென்று இரந்து வேண்டினன்.*

*பத்தனம் - பட்டணம்; நகரம். அறைசெய்துவைத்த என மாறுக. மற்று : அசை.* (கஅ)

நுண்ணிய பொருளினு நுண்ணி தாயவர்
விண்ணிழி விமானநின் றெழுந்து மீனவன்
திண்ணிய வன்பினுக் கெளிய சித்தராய்ப்
புண்ணிய வருட்கட லாகிப் போதுவார்.

(இ - ள்.) *நுண்ணிய பொருளினும் நுண்ணிதாயவர் - அணுவினும் அணுவாயுள்ள அச்சோமசுந்தரக்கடவுள், விண் இழி விமானம் நின்று எழுந்து - வானினின்றும் இறங்கிய இந்திர விமானத்தினின்றும் எழுந்து, மீனவன் திண்ணிய அன்பினுக்கு எளிய சித்தராய் - பாண்டியனது வலிய அன்பிற்கு எளிய சித்தமூர்த்தியாகி, புண்ணிய அருள் கடல் ஆகிப் போதுவார் - அறமும் அருளுமாய கடலாகி வருவாராயினர்.*

*இறைவன் எவற்றினும் நுண்பொருளாதலை,*

*"அணுத்தருந் தன்மையி லையோன் காண்க"*
*"நாலுணர் வுணரா நுண்ணியோன் காண்க"*

*என்னும் திருவாசகம். அவரைக் கண்ட துணையானே அறக்கடலென்றும் அருட்கடலென்றும் அனைவரும் கருதுமாறு போதுவாராயினர் என்க.* (க௯)

[கலிநிலைத்துறை]

பாம்பி னாற்கடி சூத்திரங் கோவணம் பசுந்தாட்
பாம்பி னாற்புரி நூல்சன்ன வீரம்வெம் பகுவாய்ப்
பாம்பி னாற்குழை குண்டலம் பாதகிண் கிணிநாண்
பாம்பி னாற்கர கங்கணம் பரித்தனர் வந்தார்.

(இ - ள்.) *பாம்பினால் கடிசூத்திரம் கோவணம் - பாம்பினால் அரைஞாணும் கோவணமும், பசுந்தாள் பாம்பினால் - இல்லாத காலையுடைய பாம்பினால், புரிநூல் சன்னவீரம் - பூணுநூலும் வெற்றிமாலையும், வெம்*

பருவாய்ப் பாம்பினால்-கொடிய பிளந்த வாயையுடைய பாம்பினால், குழை குண்டலம் பரிகின்றிணிநான் - குழையுங் குண்டலமும் காற் சதங்கை கோத்த கயிறும், பாம்பினால் கரகங்கணம் பரித்தனர் வந்தார். பாம்பினால் கைவளையும் தாங்கிவந்தார்.

பகந்தாள் பாம்பு முதலியவற்றைச் சுட்டாகக்கொள்க. பசுமை இன்மை மேற்று; "அருங்கேடன்" என்புழிப்போல இல்லாத தாளை யுடைய பாம்பு என்றார்;

"பச்சைத்தா ளரவாட்டி"

என்னும் திருமுறையுங் காண்க. சன்னவீரம் - மார்பிலும் முதுகிலும் மாறியணியும் ஒருவகை வெற்றிமாலை;

"சன்னவீரம் திருமார்பில் வில்லிலக"

என்பது திருத்தொண்டர் புராணம். பரித்தனர் : முற்றெச்சம். (௨௦)

வந்த யோகர்மா மண்டப மருங்குநின் றங்கைப்
பந்த வாலவா யரவினைப் பார்த்துநீ யிவனுக்
கிந்த மாநக ரெல்லையை யளந்து காட் டென்றார்
அந்த வாளரா வடிபணிந் தடிகளை வேண்டும்.

(இ - ள்,) வந்தயோகர் - அங்ஙனம் வந்த சித்த மூர்த்திகள், மாமண்டபம் மருங்குநின்று - பெரிய மண்டபத்தின் மருங்குநின்று, அங்கைப்பந்த ஆலவாய் அரவினைப் பார்த்து - அழகிய திருக்கரத்திற் கட்டிய நஞ்சுபொருந்திய வாயையுடைய பாம்பைப் பார்த்து, நீ இவனுக்கு இந்த மாநகர் எல்லையை அளந்து காட்டு என்றார் - நீ இப் பாண்டியனுக்கு இந்தப் பெரிய நகரத்தின் எல்லையை வரையறுத்துக் காட்டுவாயாக என்று கூறியருளினார்; அந்த வாள் அரா அடி பணிந்து அடிகளை வேண்டும் - அந்த ஒளிபொருந்திய பாம்பு அடிவணங்கிச் சித்தமூர்த்திகளை இரந்து வேண்டும்.

பந்தம் - கட்டு; கங்கணம். (௨௧)

பெரும விந்நக ரடியனேன் பெயரினால் விளங்கக்
கருணை செய்தியென் றிரந்திடக் கருணையங் கடலும்
அருளை யந்துநேர்ந் தனையதே யாகெனப் பணித்தான்
உருகெ முஞ்சின வுரகமு*மோல்லெனச் செல்லா.

(இ - ள்.) பெரும-பெருமானே, இந்நகர் அடியனேன் பெயரினால் விளங்க - இந்த நகரம் அடியேன் பெயரினால் விளங்குமாறு, கருணை செய்தி என்று இரந்திட - அருள்புரிவாயாக என்று இரந்து வேண்ட, அம் கருணைக்கடலும் அழகிய கருணைக்கடலார், அருள்நயந்து நேர்ந்து அனையதே ஆக எனப் பணித்தான் - அருளினால் விரும்பி உடன்பட்டு அங்ஙனமே ஆகுக என்று அருளினான்; உருகெழுஞ் சின உரகமும் -

*(பா - ம்.) உருகெழுஞ் செலவுரகமும்.

*(கண்டோர்க்கு) அச்சந்தருதலைப் பொருந்திய சினத்தையுடைய அப் பாம்பும், ஒல்லெனச் செல்லா - விரைந்து சென்று.*

*செய்தி - செய்வாய்; த் எழுத்துப்பேறு, ஆக என்பதன் அகரந் தொக்கது. உரு - உட்கு; அச்சம்.*

*"உருவுட்காகும்"*

*என்பது தொல்காப்பியம். ஒல்லென: விரைவுக் குறிப்பு. செல்லா: செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம்.* (௨௨)

கீட்டி சைத்தலைச் சென்றுதன் கேழ்கிளர் வாலை
நீட்டி மாநகர் வலம்பட நிலம்படிந் துடலைக்
கோட்டி வாலைவாய் வைத்துவேற் கொற்றவற் கெல்லை
காட்டி மீண்டரன் கங்கண மானது கரத்தில்.

*(இ - ள்.) கீழ்த்திசைத் தலைச் சென்று - கிழைத் திசையின்கட் சென்று, தன் கேழ்கிளர் வாலை நீட்டி - தனது ஒளிபொருந்தி விளங்கும் வாலை நீட்டி மாநகர் வலம்பட நிலம்படிந்து - பெரிய அந்நகருக்கு வலமாக நிலத்திற் படிந்து உடலைக் கோட்டி - உடலை வளைத்து, வாலை வாய் வைத்து - வாலைத் தனது வாயில் வைத்து, வேல் கொற்றவற்கு எல்லை காட்டி - வேற்படை யேந்திய பாண்டி வேந்தனுக்கு எல்லையைக் காட்டி, மீண்டு அரன் கரத்தில் கங்கணம் ஆனது - மீள இறைவனது திருக்கரத்தின்கட் கங்கணமாயது.*

*கீழ்த்திசை என்பது கீட்டிசை என மருவியது. கோட்டி - வளைத்து.* (௨௩)

சித்தர் தஞ்சின கரத்தெழுந் தருளினர் செழியன்
பைத்த வாலவாய் கோலிய படிசுவ ரெடுத்துச்*
சுத்த நேமிமால் வரையினைத் தொட்டகழ்ந் தெடுத்து
வைத்த தாமென வகுத்தனன் மஞ்சகு ழிஞ்சி.

*(இ - ள்.) சித்தர் - சித்த மூர்த்திகள், தம் சினகரத்து எழுந் தருளினர் - தமது திருக்கோயிலின்கண் எழுந்தருளினர்; செழியன் - வங்கிய சேகர பாண்டியன், பைத்த ஆலவாய் கோலியபடி - படத்தை யுடைய பாம்பு வளைந்து எல்லை வரையறுத்தபடி, சுவர் எடுத்து - மதி லுக்கு அடிநிலை பாரித்து, சுத்த மால் நேமி வரையனை - தூய பெரிய சக்கரவாள மலையை, தொட்டு அகழ்ந்து எடுத்து வைத்தது ஆம் என - அடியோடு தோண்டி எடுத்து வைத்ததாகும் என்று கண்டோர் கருதும் வண்ணம், மஞ்சகுழ் இஞ்சி வகுத்தனன் - முகில் சூழ்ந்த மதில் கட்டி முடித்தனன்.*

*சினகரம் - அருகன் கோட்டம்; இது பின் எல்லாக் கடவுளாலயங்களையும் குறிப்பதாயிற்று. பைத்த - படத்தையுடைய: பெயரடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். ஆலவாய் - பாம்பு; ஆலத்தை வாயிலுடையது எனக் காரணக் குறி. தொட்டு அகழ்ந்து என்பன ஒரு பொருளன.* (௨௪)

(பா - ம்.) *சுவடெடுத்து.

தென்றி சைப்பரங் குன்றமும் வடதிசை யிடபக்
குன்ற முங்குடக் கேடக நகரமுங் குணபாற்
பொன்ற லங்கிழித் தெழுபொழிற் பூவண நகரும்
என்று நாற்பெரு வாயில்கட் கெல்லையா வகுத்தான்.

(இ - ள்.) நால் பெருவாயில்கட்கு - நான்கு பெரிய வாயில்களுக்கும், தென்திசைப் பரங்குன்றமும்-தெற்கின்கண் திருப்பரங்குன்றமும், வடதிசை இடபக் குன்றமும் - வடக்கின்கண் இடபமலையும், குடக்கு ஏடகநகரும் - மேற்கின்கண் திருவேடகப்பதியும், குணபால்-கிழக்கின்கண், பொன்தலம் கிழித்து எழுபொழில் பூவணநகரும் - தேவருலகத்தை ஊடுருவி மேலெழுந்த சோலைகள் சூழ்ந்த திருப்பூவண நகரும், என்றும் எல்லையா வகுத்தான் - எஞ்ஞான்றும் எல்லையாமாறு அம் மதில் வாயில்களை அமைத்தான்.

என்று நான்கினையும் என வருவித் துரைத்தலுமாம். (௨௫)

அனைய நீண்மதி லாலவாய் மதிலென வறைவர்
நனைய வார்பொழி னகரமு மாலவாய் நாமம்
புனைய லாயதப் போதுமப் பொன்னகர் தன்னைக்
கனைய வார்கழற் காலினன் பண்டுபோற் கண்டான்.

(இ - ள்.) அனைய நீள்மதில் ஆலவாய் மதிலென அறைவர் - அந்த நீண்ட மதிலை ஆலவாய் மதில் என்று கூறுவர்; நனைய வார்பொழில் நகரமும் - தேனையுடைய நெடிய சோலை சூழ்ந்த அந்த நகரமும், எப்போதும் ஆலவாய் நாமம் புனையலாயது - எஞ்ஞான்றும் ஆலவாயென்னும் பெயரைப் பெறுவதாயிற்று; அப்பொன் நகர் தன்னை - அந்த அழகிய நகரத்தை, கனைய வார்கழல் காலினன் - ஒலித்தலையுடைய நெடிய வீரக்கழலை யணிந்த காலையுடைய அப்பாண்டியன், பண்டு போல் கண்டான் - முன்போல் ஆக்கினன்-

நனைய, கனைய என்பன குறிப்புவினைப்பெயரெச்சம்; கனைய என்பதில் அகரம் அசையுமாம். (௨௬)

கோடிக ணீண்மதின் மண்டபங் கோபுரம் வீதி
கடிகொள் *பூம்பொழி லின்னவும் புதியவாக் கண்டு
நெடிய கோளகை கிரீடம்வா ணிழன்மணி யாற்செய்
தடிகள் சாத்திய கலன்களும் வேறுவே றமைத்தான்.

(இ - ள்.) கொடிகள் நீள்மதில் மண்டபம் - கொடிகள் கட்டிய நீண்ட திருமதிலும் திருமண்டபமும், கோபுரம் வீதி-திருக்கோபுரமும் திருவீதியும், கடிகொள் பூம்பொழில் இன்னவும் - மணமிக்க பூக்களையுடைய சோலைகளும் இவைபோன்ற பிறவும், புதியவாக் கண்டு-புதியனவாகச் செய்து, அடிகள் சாத்திய- சோமசுந்தரக்கடவுள் அணியும்படி, நெடிய கோளகை கிரீடம் - நீண்ட கவசமும் முடியும், வாள்நிழல்

* (பா - ம்.) *கொடிகொள்.

மணியால் செய்து - விளங்கும் ஒளியையுடைய மணிகளாற் செய்து வேறுவேறு கலன்களும் அமைத்தான் - இன்னும் வேறுவேறு அணிகளும் செய்தனன்.

கோளகை - கவசத்தை உணர்த்திற்று. சாத்திய - அணியும்படி: செய்யிய வென்னும் வினையெச்சம்; பெயரெச்சமாகக்கொண்டு, சாத்திய கோளகை கிரீடம் கலன்களும் மணியாற்செய்து அமைத்தான் என்றுரைத்தலுமாம். (உ௭)

பல்வ கைப்பெருங் குடிகளின் பரப்பெலா நிரப்பிச்
செல்வ வானவன் *புரந்தரன் புரத்தினுஞ் சிறப்ப
மல்லன் மாநகர் பெருவளந் துளும்பிட வளர்த்தான்
தொல்லை நாட்குல சேகரன் போல்வரு தோன்றல்.

(இ - ள்.) பல்வகைப் பெருங்குடிகளின் பரப்பு எலாம் நிரப்பி - பலவகைப்பட்ட சிறந்த குடிகளின் பரப்பு அனைத்தையுங் குடியேற்றி, செல்வ வானவன் புரந்தரன் புரத்தினும் சிறப்ப-செல்வ மிக்க குபேரனும் இந்திரனுமாகிய இவர்கள் நகரத்தினுஞ் சிறந்தோங்க, மல்லல் மாநகர் பெருவளம் துளும்பிட - வளமிக்க பெரிய அந்நகரின்கண் பெரிய செல்வங்கள் நிறைய, தொல்லைநாள் குலசேகரன் போல்வரு தோன்றல் வளர்த்தான் - முன்னாளில் விளங்கிய குலசேகர பாண்டியனைப்போல வந்த வங்கிய சேகர பாண்டியன் வளர்த்தான்.

வானவனாகிய புரந்தரன் என்றுமாம். குலசேகரன் பண்டு திருநகரங் கண்டானாகலின், 'குலசேகரன்போல் வருதோன்றல்' என்றார்; இரு பெயரும் ஒரே பொருளவாதலும் காணற்பாலது. (உ௮)

ஆகச் செய்யுள் - உ௩௪௯.

---

(பா - ம்.) * வானவர்.

## ஐம்பதாவது
# சுந்தரப்பேரம்பெய்த படலம்

### அறுசீரடியாசிரிய விருத்தம்

அங்கண ருரக மணிந்தருள் வடிவ
மடைந்தர சகமகிழக்
கங்கண விடவர வங்கொடு கடிநகர்
கண்டருண் முறையிதுவாஞ்
சங்கணி குழையினர் பஞ்சவன் வழிபடு
தம்பெய ரெழுதியகூர்
வெங்கணை கொடுவள வன்படை முடுகிய
வென்றியை யினிமொழிவாம்.

(இ-ள்.) *அங்கணர்-அருட்பார்வையையுடைய இறைவர், உரகம் அணிந்தருள் வடிவம் அடைந்து-பாம்பினை அணிந்தருளிய சித்த மூர்த்திகள் வடிவம் கொண்டருளி, அரசு அகம் மகிழ-வங்கிய சேகர மன்னன் உள்ளமகிழ, கங்கண விட அரவம் கொடு-கங்கணமாகிய நஞ்சினையுடைய பாம்பினால், கடிநகர் கண்டருள் முறை இதுவாம்-காவலையுடைய நகரின் எல்லையை வரையறுத்துக் காட்டியருளிய திருவிளையாடல் இதுவாகும்; சங்கு அணி குழையினர்-அணிந்த சங்கினாலாகிய குழையையுடைய அவ்விறைவர், பஞ்சவன் வழிபடும் தம்பெயர் எழுதிய-பாண்டியன் வழிபடுகின்ற தமது திருப்பெயர் தீட்டிய, கூர் வெங்கணை கொடு-கூரிய கொடிய அம்புகளினால், வளவன் படை முடுகிய வென்றியை-விக்கிரம சோழன் படையைத் துரத்திய திருவிளையாடலை, இனி மொழிவாம்-இனிக் கூறுவாம்.*

*கொடு-கொண்டு; மூன்றும் வேற்றுமைச் சொல். தம் பெயர்-சுந்தரன் என்னும் பெயர். முடுகிய-ஓட்டிய வென்னும் பொருட்டு.* (க)

வெங்கய லீள்கொடி வங்கிய சேகரன்
வெண்குடை நீழலின்வாய்
வங்கமு லாவிய தெண்கடன் ஞால
மடந்தையு மாசறுசீர்ச்
செங்கம லாலய மங்கையும் வாலிய
திண்பது மாலயமேல்
நங்கையு மோவற மங்கல மான
நயம்பெற* வாழ்வுறுநாள்.

(இ-ள்.) *வெங்கயல் நீள் கொடி வங்கிய சேகரன்-வெவ்விய கயல்எழுதியநீண்ட கொடியையுயர்த்திய வங்கிய சேகர பாண்டியனது,*

---

(பா-ம்.) *நயம்பெறு.

